திரப் பொருத்தம் ஸாமானியமாக விருப்பின் இதனால் பாதகமே கிடையாது. விவாஹம் செய்விக்கலாம். இவ்விஷயம் சாஸ்திர சம்மதமும் பெரியோர்களுடைய அபிப்பிராயமும் அனுஷ்டானத்தில் ப்ரத்யக்ஷத்தில் நடந்துவருவதுமாகும். இதைப்போலவே நக்ஷத்திரக் கிரமப்படி சகலப் பொருத்தங்களும் வதுவரர்களுக்கு உத்தமமாக இருந்த போதிலும், மாங்கல்யபாவம் பாக்ய ஸ்தானபலன் இவைகள் ஸ்திரீ ஜாதகத்திலும், களத்திர பாவமும், புத்திரபாவமும் புருஷ ஜாதகத்திலும் பலஹீனமாகவோ, தோஷமுடையதாகவோ இருக்குமானால் விவாஹம் செய்விக்கலாகாது. இதை கவனித்துச் செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகும். ஸ்திரீ புருஷ ஜாதகங்கள் யோகமாகவும் ராஜயோகத்தில் பலமாகவுமிருந்து நக்ஷத்திரப் பொருத்தமெதுவுமே இல்லாதிருந்த போதிலும் விவாஹம் செய்விக்கலாம். இதை யனுஸரித்துச் செய்வதுதான் சாஸ்திர சம்மதம். இவ்வாறு நடத்தப்படும் விவாஹங்களே பரிபூர்ணமான சுபபலன்களை அளிக்கும். இது அனுபவ ஸித்தமாகும். நக்ஷத்திரப் பொருத்தமும் அனுகூலமாக இருந்தால் விசேஷம் தான் என்பதை யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். இதைப் பற்றிய பூரா விவரங்களையும் என்னால் எழுதப்பட்ட "விவாஹப் பொருத்தங்கள்" என்னும் நாலில் வெகு விரிவாகவும் தெளிவாகவும் காணலாம்.

மற்றொரு விஷயம். "ஆண்மூலம் அரசாளும் பெண் மூலம் நிர்மூலம்" என்கிறார்கள். இது கொஞ்சமும் சரியல்ல. இதுபோல் சிலர் சொல்லிவிடுவது கன்னிகை ஜாதக விஷயத்தில், விவாக காலங்களில் பெரும் சங்கடத்தை உண்டாக்கி வருகிறது. மூல நக்ஷத்திரத்தில் ஜனித்த

இதில் முக்யமாக ஜாதக மூலமாக ஏற்பட்ட பன்னிரண்டு பாவபலன்களே என்றும் ஸ்திரமான பலனை அளிக்கக் கூடியவைகள் என்பதையும் மற்ற குணதோஷங்கள் இவற்றிற்குத் தக்கபடியே இருக்குமென்பதையும் அறிந்து விவாகங்களை நடப்பிக்கவேண்டும். இப்படி செய்வது தான் சரியான கிரமம், சாஸ்திர சம்மதம். இதுபோல் அறிந்து செய்யவேண்டும். இப்படி செய்தால்தான், பரிபூர்ணமான சுபபலனை, வதூவரர்கள் ஸம்ஸார வாழ்வில் அடையமுடியும். இதை யறியாது சாஸ்திரத்தை குறை கூறுவதில் என்ன பயன்? எனவே ஆஸ்திகர்கள் அனைவரும் இதை யறிந்து விவாகங்களை செய்விப்பார்களாக.

## ஜாதக பலன்கள் சொல்லுதல்

ஜாதகயோக பலன்களைச் சொல்லுவதில் மாத்திரந் தான் ஜோதிஷர்களுக்குள் அபிப்பிராய பேதங்கள் அதிகமாக ஏற்படுகிறதே தவிர, கணித விஷயத்தில் இது போன்ற ஸந்தேகங்கள் ஏற்படுவதில்லை. ஏனெனில் கணித விஷயம் ஒரு மணி காலம் படித்தாலும், போதுமானது; ஸ்திரமாக ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளலாம்; பிறகு அதை மாற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. அதாவது நாலும் மூணும் ஏழு என்றால் இது எப்பொழுதும் இப்படியே தானிருக்கும். இது ஜாதக கணிதத்திற்கு பயன்படும். பலித பாவம் அப்படியல்ல ஜாதக தசாயோகப்படி பலன் விஷயம் ஸதா மாறிக்கொண்டே இருக்கும். இதை யறிந்து சொல்ல வேண்டும் இதற்கு விசேஷமான ஸமயோசித புத்தி ஸாமர்த்தியமும் உலக ரீதியறிவும். வாக்வன்மையும் சாஸ்திர ஞானமும் நவக்கிரகஹங்களின் அனுக்கிரகமும் தெய்வானு கூலமும் ஜோதிஷனுக்கு நல்ல தெசையும் பெரியோர்களின் உப

—காரகன் இன்னும் அநேக விதமாக வெல்லாம் நிர்தார ணம் செய்து விடுவேன் என்பார்கள். இது விஷயம் எப்படிப்பட்டதென்பதை மேலே சொல்லியுள்ளேன். இப்படிப்பட்டவர்களை ஒரு ஜாதகத்தைக்கொண்டு ஒரு பாவத்திற்குப் பலன் சொல்லும்படி கேட்டுவிடின் போது மானது இவர்கள் மிரளமிரள விழிப்பார்கள். ஜாதகபலனில் எதைச் சொல்வது எதை விடுவது என்று இவர்களுக்கு சந்தேகம் பிடித்துக் கொண்டுவிடும். இரண்டொரு வார்த் தைகள்கூட இவர்களால் பலன் சொல்ல முடிவதில்லை. மறுபடியும் இவர்கள் தங்கள் முறைப்படிக்கே யதாகிரம மாக கணக்குப் போட ஆரம்பித்து விடுவார்கள். ஒரு மெஷினை அச்சுவேறு ஆணிவேருகப் பிரித்து விட்டு அதை சேர்க்கவகை தெரியாமல் குப்பையைக் குவித்துக்கொண் டிருப்பதுபோல் இவர்களும் கணக்குகளால் பக்கங்களை நிரப்பிக் கொண்டிருப்பார்கள். இது தான் அதிக கணக் கிருலேற்படுகிற அனர்த்தம். இது முற்றிலும் பிசகு என் பதே எமது அபிப்பிராயம். வானசாஸ்திரம் கற்க வேண் டில் முதலில் ஆகாயத்திலுள்ள சகல நக்ஷத்திரங்களையும் எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டு தான் பிறகு கற்க வேண்டுமென்பது போலும் ஒரு மனிதனின் மேதையைப் பற்றி அபிப்பிராயம் கூறவேண்டில் அவன் சிகையிலுள்ள சகல ரோமங்களையும் எண்ணிக் கணக்கெடுத்த பிறகு தான் அவன் மேதையைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல முடியும் என்பது போலுமாகிவிடுகிறது இம்முறை. அதற் காக கணிதமே கூடாதென்பது எமது கருத்தல்ல. தின மும் சூரியன் உதயமாகிருன் கிரமேண ராத்ரிகாலம் வரு கிறது மறுபடியும் கிரமேண உதயமாகிறது இதை நாம் ஸ்தூலமாக அறிந்து கொண்டு அந்தந்த வேளைக்குத் தகுந்தபடி நாம் செய்யவேண்டிய கடமைகளைச். செய்

கும்போதே திட்டமாகப் பலனைத் தெளிவான முறையில் தைரியத்துடன் சொல்ல முடியும். அப்பலன்கள் அனுபவத்தில் ஆச்சரியப்படும் முறையில் சரியாக விருக்கும். இம்மாதிரியாகப் பலனைச் சொன்னால் தான் ஜாதகர்களும் நற்பலனை அடையமுடியும். ஜோதிஷ சாஸ்திரமும் ப்ரகாசமடையும். ஜோதிஷர்களுக்கும் புகழுண்டாகும்.

மூலாதாரமான பலன்களை இதுபோல் சொல்லிவிட்டு மற்றவைகளைச் சமயோசித புத்தியினால் உலகரீதிக்கொத்தபடிப் பொருத்தமாகப் பேசி விடலாம். இம்மாதிரி யுக்தியாகப் பலன் சொல்வது தான் ஸரியாக நடந்து வருகின்றது. இப்படிச் சொல்லும் பலன்கள் தான் ஜாதகர்களின் மனதில் பதியும். ஜாதக பலன்களைச் சொல்லும்போது புரியாத பதங்களையோ ஸங்கல்பம் சொல்வது போல் எடுத்ததற் கெல்லாம் ஸ்லோகங்களையோ சொல்லிக்கொண்டிருக்கலாகாது. நாம் சொல்லும் விஷயம் ஜாதகர்களுக்கு விளங்கும்படி லலிதமான பதங்களைக் கொண்டே ஜாதக பலனைச் சொல்ல வேண்டும். அவசியமாயின் சற்று ஹாஸ்மாக பேசிக் கொண்டே விஷயங்களை விளங்க வைக்கலாம். ஆனால் இதற்கு அதிக லாகவமும் ஸாமர்த்தியமும் வேண்டும். இது சகலருக்கும் எளிதான விஷயமல்ல. இம்மாதிரியாக ஜாதக பலன்களைச் சொன்னால்தான் பலன்களும் சரியாக விருக்கும். ஜாதக பலன் கேட்பவர்களும் ரஸிப்பார்கள். இது தான் ஜாதக பலன் சொல்லுவதற்கு சரியான முறை. இந்தக் கிரமத்தைத் தவிர, ஜாதக பலனைச் சொல்ல வேறு சரியான மார்கம், சுலபமான உபாயங்கள் எதுவும் கிடையாது. இதுவே எனது அனுபவத்தில் யானறிந்த உண்மையாகும். எனவே இம்முறையை சகலரும் அனுஸரிக்கலாம். ஜாதக பலன்களைச் சரியாகச் சொல்லி மேன்மையடைய விரும்புபவர்கள்

தில் பக்க வாத்தியங்களில் லயவாத்யங்களில் ஸங்கீத வித்வான்கள் இரண்டொன்றைத் தங்கள் ஸாதகத்திற்கும் கண்டத்வனிக்கும் சாகித்ய ஞானத்திற்கும் தம் அனுபவத்திற்கும் தக்கபடி எப்படி அமைத்துக் கொள்ளுகிறார்களோ அது போலவே ஜோதிஷர்களும் தங்கள் ஞான பரிபக்குவத்திற்குத் தக்கபடி இரண்டொன்றை பக்க பல ஆதாரமாக வைத்துக் கொண்டு, குறிப்பாகக் கவனித்து ஜாதக பலன்களைச் சொல்லவேண்டும். இது போல் ஜாதக யோகங்களைச் சொன்னால்தான் ஜாதக பலாபலன்களைச் சொல்வது சுலபமாகவும் சரியாகவும் நன்றாகவுமிருக்கும். இதைக் கவனியாமல், எல்லா பக்கபல ஆதாரங்களையும் ஒருங்கே வைத்துக் கொண்டு சகல பலாபலன்களையும் சேர்த்துப் பயன் சொல்ல வேண்டும் என்று ஆரம்பித்துப்பலன் சொல்ல முற்படின் இம்முறை எவ்வகையிலும் பயன்படமாட்டாது. இது அறியாமையும் வீண் சிரமமுமாகும். இது போன்ற கிரமத்தில் வெகு பிரயாசையுடன் ஆராய்ந்து பலன் சொல்ல முற்படுபவர்கள் பெரிதும் ஏமாற்றமே அடைகிறார்கள். இப்படி பலன் சொல்வது மிளகுரஸமாயு மிருப்பதில்லை, பாயஸமாயு மிருப்பதில்லை. மிளகுரஸ பாயஸமாக இரண்டையும் கலந்தாற் போல் கவைக்குதவாததாக விரஸமாக மாறிவிடுகின்றது. இப்படிக் குழப்பிக் கொண்டிருப்பது சரியான முறையல்ல. இப்படிப் பலவற்றையும் சோதித்துப் பலன் சொல்ல ஆரம்பிப்பதால் என்னவாகின்ற தெனில், தீர்மானமான பலனைச் சொல்லி எந்த முடிவிற்கும் வரமுடியாமல் தயங்கிக்கொண்டே இருக்க வேண்டி நேரிடுகின்றது. இப்படிச் செய்வதால் ஜாதக பலன் கேட்பவர்களுக்கும் நாம் சொல்வது யோகமா தோஷமா என்பது கூட விளங்குவதில்லை. தவிர சகலவித ஆதாரங்களையும் ஒருங்கே சேர்த்

கணக்கை ஒவ்வொரு நிமிஷத்திற்கும் பல பிரிவுகளாகப் போட்டு விடலாம் என்பதை முன்னமே சொல்லியுள்ளேன். இதில் சிரமமே கிடையாது. இதை ஆதாரமாகக் கொண்டு ஒரு ஜாதகரின் த்ரிகால பலன்களையும்- ஒவ்வொரு நிமிஷத்திலும் நடந்ததையும் நடப்பதையும் நடக்கப் போவதையும் சொல்ல முடியுமாவெனின் இது முடியவே முடியாது. பொதுப் படையாக உள்ள ஸ்தூலமான பலன்களைத் தான் த்வாதச பாவ பலன்களால் ஜாதகர்களின் நிலைமையை நாம் சரிவரச் சொல்ல முடியும். இதை சரிவரத் சொல்லத் தெரிந்தாலேயே இக்கால நிலைக்குப்போதுமானது. இப்படி பலன் சொல்ல கற்பதற்கே பல வருஷங்கள் பயிற்சி பெறவேண்டியிருக்கின்றது. இது தான் ஸாராம்சம். ஒரு ஜாதகத்திலுள்ள ராஜயோக பலன்களையும், ஜாதகர்களின் திறமைகளையும் சொல்ல வேண்டில் இதற்கு ஜாதகரின் வயக்கிரமத்தையும், ஜாதி, குலம், தொழில், இவைகளையும் அனுஸரித்து பலனை திறம்படப் பொருத்தி அழகு படுத்திச் சொல்ல வேண்டும். கணித பாகத்திற்கு இப்படிப்பட்ட தொல்லைகளெல்லாம் கிடையவே கிடையாது. கணிதம் உழைப்பால் வந்து விடக்கூடியது. பலன் சொல்லும் திறமை என்பது பிறப்பிலேயே ஞான பலத்தால் வரக்கூடியது. இப்படி உழைப்பிலும் ஸாமர்த்தியத்திலும் கணிதத்திற்கும் பலன் சொல்லு முறைக்கும் உள்ள வேற்றுமையை சீர்தூக்கிப் பார்ப்பின் இது எறும்பிற்கும் யானைக்கு முள்ள வித்யாஸமாக விருக்கின்றது.

ஜாதகபலன் சொல்லுதற்கு ஜோதிஷன் ஜாதகர்களின் வயதிற்கும் ஜாதக யோகத்திற்கும் தக்கபடி ஸந்தர்பம்போல் எவ்வளவோ முறைகளைக் கையாள வேண்டி யிருக்கின்றது. இதற்கு விசேஷ அனுபவமும்

டாலேயே போதுமானது. இதைக்கொண்டு துவாதச பாவபலன்களையும் வெகு அழகாகச் சரிவரச் சொல்லி விடலாம். இதுபோல் ஜாதக பலன்களை சரளமாகச் சொல்லிப் பழக்கப்படுவதுதான் சரியான முறை. இதைத் தவிர வேறு சுலபமான வழி இதற்கு எதுவும் கிடையாது. முதலில் ஸ்தூலமான பலன்களையே சொல்லிப் பழகவேண்டும். இதிலிருந்து ஞானம்வளர்வதற்கேற்ப-சூக்ஷ்மமான பலன் களையும் கிரமேண சொல்ல ஆரம்பிக்கலாம். பலன்கள் இம்மியும் பிசகின்றி சரியாக விருக்கும்.

இம்மாதிரி ஜாதக பலன்களைச் சொல்லுவதற்கு அதிக கணிதம் அவசியமே யில்லை. பல பூர்வ கிரந்தங்களை நன்ருக படித்து பயிற்சிபெற்ருல் போதுமானது. இதுபோல் ஜாதக பலன்களைச் சொல்லுதற்கு தசா - புக்தி - ராசி அம்சசக்கிர கிரகநிலைகளே போதுமானவை.

## ராஜயோக விஷயம்.

ராஜயோகங்களைப் பற்றிய விஷயங்களில் சிலவற்றை மாத்திரம் இங்கே குறிப்பிடுகிறேன். பொதுவாக ராஜயோகம் இல்லாத ஜாதகமே உலகில் கிடையாது என்பது எனது அபிப்பிராயம். இது விஷயம் பூமியில் ஜலமில்லாத இடமே எங்கும் கிடையாது என்பது போன்றதாகும். ஜலம் கிடைக்கும் விஷயத்தில் பூமிக்குத் தக்கபடி எவ்வளவு மாறுதல்கள் இருக்கின்றனவோ பூஸாரத்திற்குத் தக்கபடி தீர்த்தத்தின் தரத்திலும் குணத்திலும் எவ்வளவு மாறுபாடுகள் பேதங்கள் இருக்கின்றவோ அதைப் போலவே ராஜயோக பலன்களிலும் அப்பலனை ஜாதகர்கள் அடையும் விதத்திலும் பல வகைகள் இருக்கின்றன: இதை யறிந்து ஜோதிஷர்கள் ஜாதகருக்குப் புரியும்படி, எப்படிப்பட்ட ராஜயோகம், அது எம்மாதிரியான வகை

சரியான வயக் காலத்தில் நடப்பதாகவும் இருந்தால் இந்த யோகம் உண்டாகும். இப்படிப்பட்ட யோகம் லக்ஷத்தில் இரண்டொன்று இருப்பதும் துர்லபம். இதைத்தெரிந்து கவனித்துப் பலன் சொல்ல வேண்டும்.

ஸாதாரண ராஜயோகம்:—பரம் பரையாக மஹா ராஜாக்களாக உள்ள குடும்பத்தில் ஒருவன் ஜனித்து, குடும்பதர்மத்தை யொட்டி அவன் ராஜாவாக வரும் யோகமானது ஸாதாரண ராஜயோகமாகும். இவர்கள் பேருக்கு மாத்திரம் ராஜாவாக இருப்பார்கள். அதற்கு மேல் அவர்கள் அடையும் பலன்கள் யாவும் பரம்பரை பாத்யதையை அனுஸரித்தே இருக்கும். இதை ஜாதக துவாதச பாவயோகங்களுக்கு அனுகுணமாகவும் தசா புக்திகளின் ரீதிப்படிக்கும் சொல்ல வேண்டும். இம்மாதிரி யான ஒரு ஜாதகன் ராஜ குடும்பத்தில் ஜனித்த ஒரு விசேஷத்தினாலேயே இதை வெகு சிலாக்கியமான ராஜ யோக ஜாதகம் என்று சொல்லி விட இயலாது. இதற் காகவே தான் ஜாதி, குலம், ஜனித்த இடம் முதலியவை களையும் அறிந்து அதற்குத் தக்கபடி ஜாதக பலனைச் சரிவரப் பொருத்தமாகச் சொல்ல வேண்டுமென்றிருக் கிறது. இது மத்யம வகையைச் சேர்ந்ததாகும்.

அபவாத ராஜயோகம்:—ஒருவன் சுந்தரமான ரூப லக்ஷணங்களுடன் கூடியவனாக இருந்து நாடகத்தில் ராஜா வாக நடிப்பது, ராஜயோக தோரணையாகப் பேசுவது, நடையுடை பாவனைகளில் ராஜாவைப் போலத் திகழ்வது இப்படியும் உண்டு. மேற்படி குணமுடையவர்களை ஸ்வீ காரமாகவோ, அபிமானமாகவோ, யாரோ ஒருவர் எடுத் துக் கொள்ளப் போவதாகவும், விசேஷ தனத்தைக் கொடுக்கப் போவதாகவும் சிலர் சொல்லியும் விடுவார்கள். இது போன்றயோக முடையவர்கள் அது உண்மையா,

தனக்கும் அதிகமாக வித்தையில்லாமலும், மற்ற யோக்ய தாம்சங்களில் பொதுவாய்க் குறைவாகவும் இருந்தும், தன் வரையில் மாத்திரம் சகல உதவியையும் மஹாராஜாவுக்குச் சமமான தனவந்த பிரபுக்களால் இவர்கள் அடைவது அல்லது ஸ்வீகாரம், அபிமானம் இவைகளால் ஒருவனுக்கு ஏராளமான சொத்து சுதந்திரங்கள் எதிர் பாராத வகையில் கிடைத்து விடுவது. இதைக் கொண்டு இவர்கள், ஒரு மஹாராஜா எவ்விதமான சுகபோக வாகனதிகளின் சுகானுபவத்தை அடைய முடியுமோ, அது போல் தானும் அனுபவித்து விடுவதையே பிரதானமாக எண்ணி அப்படியே செய்வார்கள். இது போல் ராஜபோகத்தை அடைவது உண்டு. இதுவே அனுபவ ராஜயோகமாகும். இவர்களுக்கு உலகில் மாத்திரம் எங்கும் நல்ல பெயர் இருப்பதில்லை. "இதெல்லாம் சில நாள் தான் நடக்கும். அதிகமான கடன்கள் இருக்கின்றன, மைனராக விளையாடுகிறன் ; இந்த யோகம் அதிக நாள் நீடிக்காது. பார்த்துக் கொண்டே இருங்கள் எல்லாம் வெளி ஆர்ப்பாட்டந் தான். வெகு சீக்கிரத்திலேயே இதெல்லாம் அழிந்து விடப்போகிறது ; உள்ளே ஒன்றும் கிடையாது" என்று பலர் பலவிதமாக இவர்களைப் பற்றிப் பேசிக் கொள்வதும் சிலர் இதை நம்பாமல் எதிர்த்து "அது எப்படியிருந்தாலும் இருக்கட்டுமையா, அவன் யோகம் எவனும் அனுபவிக்கமாட்டான்" என்று சொல்லிக்கொள்வதும் இப்படி ஸ்வல்ப காலம் வரையில இது போலெல்லாம் சரியாகவே நடந்து பிறகு அக்குடும்பத்தாருக்கு ஒரு தம்படியும் வைக்காமல் அநேக கடன்களையும் புத்திர பௌத்ராதிகள் ஆயுள் வரையில் சிந்திக்கும்படியான கெட்ட பெயரையும் கஷ்ட நஷ்டங்களையும் வைத்து விட்டு இவர்கள் மடிவார்கள். இந்த யோக

வந்தவனுகவும் ஸத்ஸ்பாவ முள்ளவனுகவும், சாஸ்த்ர ஞான முடையவனுகவும், மந்த்ரஜப. ஆசார அனுஷ்டான குசலனுயும், அரசன் அல்லது அரசனுக்குச் சமானவனுகவும், அழகிய சிறப்பான தேக காந்தியை உடையவனுகவும், கோமளமான தேகமுடையவனுகவும், தியாகியும் சத்ருக்களை ஜயிப்பவனுகவும், தனவானுகவும், 70 வயது ஆயுளுடையவனுகவும், ஸைகியாவும் சேனுதுரங்காதிபதியாயும் இருப்பானென்பதாம்.

2. பத்ரயோகத்தில் ஜனித்தவன் ஸிம்ஹத்தினுடைய முகம்போன்ற கம்பீரமான தோற்றத்தை உடையவனுகவும், கஜபதியும், வலியமார்பை உடையவனும், அழகும், வட்டமுமான தோள்கள் உடையவனும், மௌனமா யிருப்பவனும், பந்துக்களுக்கு உபகாரம் செய்பவனும், 80 வயதுடையவனும், விபுலமான புத்தி யுடையவனும், கீர்த்தியாகிய தனத்தை உடையவனும் ஆவான்.

3. ஹம்ஸயோகத்தில் ஜனித்தவன் மனோஹரமான அழகுடைய சிவந்த முகத்தை உடையவனும், நீண்ட மூக்குடையவனும், நல்ல பாதங்களுடையவனும், ஹம்ஸம் போன்ற கண்டத்வனி யுடையவனும், சிலேஷ்ம (குளுர்ச்சியான) ஸ்வபாவ முடையவனும், தங்கச் சாயையான மேனியுடையவனும், சுகுமாரமான மனைவி மக்களை யுடையவனும், மன்மதனுக்குச் சமானமானவனும் மனஸ்ஸந்துஷ்டியுடன் கூடிய சுகமுடையவனும், சாஸ்திரஞான பராயணனும், அதிநிபுணனும், 80 வயதுடையவனும், ஸத்காரியங்களில் ஆஸக்தி யுடையவனும், ஸதாசாரமுடையவனும் ஆகிருன். ஆவான் என்பதாம்.

4. மாளவ்ய யோகத்திற் பிறந்தவன் ஸம்பத்கரமான செய்கை (சேஷ்டை) களை யுடையவனும், லலிதமான கண்களும், அழகான அங்கங்களுடையவனும்,

கஜகேசரி யோகம் :—சந்திரனுக்கு கேந்திரத்தில் குரு இருந்தாலும் நீச அஸ்தங்கத மடையாத குரு, சுக்ர, புதர்களால் சந்திரன் பார்க்கப்பட்டாலும் கஜ கேசரி யோகம் உண்டாகும். இந்த யோகத்தில் பிறந்த வன் தேஜஸ்வியாயும், தனதான்ய முள்ளவனும், புத்தி மானும், நல்லகுண முடையவனும் ராஜ பிரியனும் இருப்பான்.

சாமரயோகம் :—லக்னாதிபதி கேந்திரத்தில் உச்சனாக இருந்து குருவால் பார்க்கப்பட்டாலும், இரண்டு சுபகிரஹங்கள் லக்னத்திலாவது, ஏழாமிடத்திலாவது, பத்தா மிடத்திலாவது இருந்தாலும் அதற்குச் சாமரயோகம் என்று பெயர். இப்படிப்பட்ட யோகத்தில் பிறந்தவர் கள் ராஜாவால் பூஜிக்கப்படுபவர்களாயும், நல்ல பண்டி தர்களாகவும், நன்றாய்ப் பேசுபவர்களாகவும், வேத சாஸ் திரங்க ளறிந்தவர்களாகவும், 70 வயதுள்ளவனாகவும் இருப்பார்கள்.

சங்கயோகம் :—ஐந்து, ஆறுமிடங்களுக் குரியவர்கள் ஒருவருடைய கேந்திரத்தில் ஒருவர் இருக்க, லக்னாதிபதி பலம் பெற்றிருந்தாலும், லக்னாதிபதியாவது, கர்மாதி பதியாவது சரஸ்தானத்திலிருக்க, பாக்யாதிபதி பலவானா யிருந்தாலும் சங்கயோகம் என்று பெயர். இந்த யோகத்திற் பிறந்தவர்கள் போகசீலர்களும், தயாளுவும், மனைவி மக்கள் தனம் கிருஹம் இவைகளை யுடையவர் களும், புண்ய கர்மாக்களைச் செய்பவர்களும், சாஸ்திர ஞானம், நல்ல ஆசாரம் இவைகளுள்ளவர்களுமாவார்கள்.

லக்ஷ்மீ யோகம் :—பாக்யாதிபதி கேந்திர மூலத்ரி கோணங்களிலாவது, பரமோச் சத்திலாவது இருந்து, லக்னாதிபதி பலம் பெற்றிருந்தால், லக்ஷ்மீயோகம் என்று பெயர். இதில் பிறந்தவர்கள் ஸந்தோஷ குணமுள்ளவர்

டாலும் தரித்ரயோக முண்டாகும். சந்திரன்
த்திலாவது, கோணத்திலாவது, நீசவர்க்கத்தை
சத்ரு வர்க்கத்தையாவது அடைந்திருந்து, சந்திர
2, 6, 8, 10 ஆமிடங்களில் குரு இருந்தால் தரித்ர
ம் என்று பெயர்.

னி, சுக்கிரர்கள் பாபகிரக வர்க்கங்களை அடைந்து
ர்க்கொருவர் பார்த்துக்கொண்டாலும், ஒரே ராசி
இருந்தாலும், ராஜவம்சத்தில் பிறந்தவனு யிருந்தா
கேமத்ருமயோகத்தை அடைகிறான்.

சந்திரன் பாபியாய் பாபகிரஹத்தினுடைய ராசியி
வது பாபக்கிரக அம்சத்திலாவது இருந்து பலஹீன
, சூரியனால் பார்க்கப்பட்டு, இராத்ரி வேளையில்
னனமானால் கேமுத்துருமயோகம் என்றும், க்ஷீண
ந்திரன் நீசாம்சத்திலிருந்து நீசகிரஹங்களுடன் சேர்ந்து
ாக்யாதிபதியால் பார்க்கப்பட்டிருக்க, இராத்ரியில்
னனமானால் கேமுத்ரிமம் என்றும் சொல்லப்படுகிறது.

மேற்படி கேமுத்திருமங்களுக்கு அபவாதங்களும்
பல (நிவர்த்திகள்) க்ரந்தங்களில் சொல்லப்பட்டுள்ளன.

சகட யோகம் :—சந்திரனுக்கு ஆறு, எட்டாமிடங்
களில் குரு இருந்தால் சகடயோகம் என்று பெயர்.
சகடயோகத்திற் பிறந்தவன் ராஜகுலத்தில் ஜனித்தவனு
லும் தரித்திரனும் துக்க ஆயாஸாதிகளால் நாளுக்குநாள்
பரிதபிப்பவனும் சிந்தாக்ராந்தனுமாவான்.

ப்ரேக்ஷ்ய யோகங்கள் :—பத்தாமிடத்தில் சூரியனும்,
7 இல் சந்திரனும், நாலில் சனியும், மூன்றில் அங்காரகனு
மிருக்க, லக்னமானது சரமாய், இரண்டில் குரு இருந்து
இராத்ரி வேளையில் ஜனித்தவர்கள் ஒருவரிடம் சேவகா
விர்த்தி செய்யும் வேலைக்காரர்களாவார்கள்.

ருடையவன் ரந்த்ராதிபதியால் பார்க்கப்படுவது, லக்னாதிபதி ஐந்தில் நீசனாய் இருப்பது இவ்வாறுண்டாகும்போது ரேகாயோகமாகும். சுபகிரஹங்கள் ஷஷ்டாஷ்டமவ்யய ராசிகளிலும் பாபிகள் கேந்திர கோணங்களிலும் இருந்தாலும் ரேகாயோகமாகும். லக்னாதிபதி பாபிகளுடன்கூடி, குரு சுக்கிரர்கள் அஸ்தங்கதர்களாகி, சுகாதிபதி பாப கிரஹங்களுடன்கூடி அஸ்தங்கதமாயிருக்க, ரேகாயோக முண்டாகும. பாக்யாதிபதி ஹஸ்தங்கதனாகி, லக்னாதிபதி நீசத்திலிருந்தால் ரேகாயோகம் உண்டாகும். மூன்று கிரஹங்கள் ஹஸ்தங்கதர்களாய் நீசத்திலிருக்க லக்னாதிபதி துஷ்ட ஸ்தானத்திலாவது பலஹீனனாகவாவது இருந்தால் ரேகா யோகமாகும். பாப கிரகங்கள் தன, பாக்ய, ராஜ்ய, லாப, சுக, புத்ர, களத்ர, ப்ராத்ரு ஸ்தானங்களிலிருந்து. நீசாரி பாபிகளால் பார்க்கப்பட்டால் ஆயுள் காலத்தில் ஒன்பதாவது பாகத்தில் ரேகாயோக முண்டாகும். 1-2-3 பாபகிரகங்கள் விக்ரம ஸ்தானத்திலிருந்து சத்ருபாப நீசகிரகங்களால் பார்க்கப்பட்டால் கிரமமாய் பிரதம, மத்யம, அந்திய வயதுகளில் ரேகாயோக முண்டாகும்.

ரேகா யோக பலன்கள்: ரேகா யோகத்தில் ஜனித்தவன் படிப்பில்லாதவனும், தனமில்லாதவனும் தரித்திரனும், காமியும், குரூராத முடையவனும். துக்கிப்பவனும், அசுத்தமானவனும் ஸௌபாக்கிய மில்லாதவனும், ஸாமர்த்திய முள்ளவனும், பிக்ஷாசியும், மலினமுள்ளவனும், விவாதத்திலாசை உடையவனும், மாத்சர்யம் ரோஷம் உடையவனும், தேவ பிராம்மணர்களை நிந்திப்பவனும, நாள்தோறும் பெண்டு பிள்ளைகளால் நிந்திக்கப்படுகிறவனுமாவான். துஷ்டாத்மாவும், தாரிஷ்டயோகமுள்ளவனும், ஊமையும், குருடனும், செவிடும், வெறி

பிடித்தவனும், நொண்டியும், விகாரமான கண்களுடையவனுமாவான்.

இன்னும் அனேக யோகங்கள்பல பாவ கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளன. விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

ஸாதாரணமாக எந்த ஒரு ஜாதகத்திலும் தனிப்பட்ட ராஜயோகங்களோ, அல்லது அசுபயோகங்களோ மாத்திரம் இருப்பதில்லை. இருக்கமாட்டா. இரண்டும் கலந்தே தான் இருக்கும். இவ்விஷயம் எப்படிப்பட்டதெனில் ஜலத்தில் பாசி இருப்பது போலும், நெற் பயிரில் புல்லிருப்பது போலும், எப்பேர்ப்பட்ட சரீர பலமுடையவர்களுக்கும் ஏதேனுமோர் உபாதி இருப்பது போன்றுமாகும். உதாரணமாக இதன் தன்மை எப்படிப்பட்டதெனில் நல்லருசியுள்ள பழத்தில் அல்லது ஒரு அழகான புஷ்பத்தில் ஒரு வண்டோ அல்லது ஒரு புழுவோ உள்ளே புகுந்து அதை துளைப்பது போலும். நல்ல செடி கொடிகள் பூச்சிகளால் அரிக்கப்பட்டு விடில் அவை எப்படி சோபையற்றதாகி விடுகின்றவோ அது போன்று மாகும். அந்த புழு பூச்சிகள் எவ்வளவு தூரம் பழத்துக்கும் புஷ்பங்களுக்கும் கெடுதலை விளைவிக்கக் கூடும் செடி கொடிகளின் சக்தியை இவை எவ்வளவு வரை பாழ்படுத்த முடியும் என்பதை ஆராய்ந்து கூறுவது போலவே இந்த பாபயோகங்களால் அதி உத்தம ராஜயோக ஜாதகர்களின் சுபயோகங்கள் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டு விடுகின்றனவென்பதை ஜோதிஷர்களால் நன்கறிந்து சொல்ல முடியும். ஒரு பிரபல ராஜயோகமுடைய ஜாதகத்தில் பாபயோகமும் கலந்திருக்குமானால் சுபயோகத்தை எவ்வளவு வரையில் ஜாதகர்கள் இழந்து விடுகிறாகள், அந்தபாபயோகங்கள் ஜாதகர்களை எவ்வளவு



தூரம் எவ்வெவ்வகையில் பாதிக்கும் பாதிக்கின்றது. இப்படியாகி விடுவதால் எவ்வளவு கஷ்டநஷ்டங்கள் நேரிடுகின்றன. பாபயோகங்கள் அப்படி பாதிப்பதை விலக்க முடியுமா. இதை நிவர்த்தித் துக்கொள்ள மார்க்கமென்ன அப்படி பாபயோகங்களால் பாதிக்கும்படி நேரிட்டால் அதற்கு நிவர்த்தி சாந்தி பரிஹாரங்கள் ஏதேனும் உண்டா? முதலான விஷயங்கள் ஜோதிஷ சாஸ்திரத்திலும் மந்திர சாஸ்திரத்திலும் வெகு விஸ்தாரமாகச் சொல்லப்பட்டுள்ளன. இத்யாதி விஷயங்களை தகுந்த ஜோதிஷரைக் கொண்டே அறிய வேண்டும்.

இது போன்றவைகளை உத்தம ராஜயோக ஜாதகர்களும் சரிவர தெரிந்து கொண்டு தங்கள் ராஜயோகங்களை தக்க முறைகளால் விர்த்தி செய்துக் கொள்ளலாம் கேமுத்திரயோக ஜாதகர்களும் தம் தோஷங்களை இது போல் தெரிந்து கொண்டு தங்கள் பாப பலனை நிவர்த்தித் துக் கொண்டு பயன் பெறலாம்.

இது விஷயம், ராஜயோகத்தில் விளை பூமியை உரம் போட்டு பலப்படுத்தி பயனடைவது போலும் பாப யோக விஷயத்தில் களர் பூமியை, பண்படுத்தி விளைபூமியாகச் செய்து பலனடைவது போலுமாகும்.

உதாரணமாக ஜாதகயோகம் ஒரு தடாகத்தைப் போன்றது. அதிலுள்ள ராஜயோகங்கள், தடாகத்தில் நிறைந்துள்ள மதுரமான தீர்த்தத்தைப் போன்றது. தோஷங்களென்பவை அந்த தீர்த்தத்தில் விழுந்துள்ள தழைகள் இலைகள் முதலியவைகள் ஒரு பக்கம் அழுகி இருப்பது போன்றது அல்லது பாசி மூடியிருப்பது போன்றது. சாந்தி பரிகாரங்ககள் என்பவைகள் அவைகளை நிவர்த்தித்துக் கொண்டு நற்பலனடைவதென்பது இது போல் தடாகத்திலுள்ள தீர்த்தத்தை வடிக்கட்டி

செய்ய வேண்டும், பாகை, கலை, விகலை என்றபடி யெல்லாம் பிரித்துக் கணக்குப் பார்க்க வேண்டும்; ஜோதிஷமென்றாலென்ன? அவ்வளவு சாமான்யமா? இது ஒரு பெரிய சமுத்திரம், இதில் எவ்வளவோ விஷயங்களையெல்லாம் நாம் கவனிக்கவேண்டும்'' என்று சொல்லி, இன்னும் ஏதேதோ அர்த்தமற்ற காரணங்களை யெல்லாம் காட்டி, இதற்குப் பதில் சொல்லுகிறார்கள்.

இப்படி பதில் கூறுபவர்கள் விஷயமானது, ஆட வகையறியாதவர்கள், கூடம் தோணல்என்பது எப்படியோ அப்படியிருக்கின்றது. "சரிதானய்யா, அப்படியானால் இவற்றையெல்லாம் கவனித்தே சொல்லுங்கள்'' என்றால், அவர்கள் 'இதற்கு இரண்டொரு மாதம் பிடிக்கு' மென்கிறார்கள். அப்படியே தாமதமும் எடுத்துக்கொண்டே செய்யுங்கள் என்று சொன்னோமானால், அவர்கள் இதற்கு என்ன செய்கிறார்கள் என்றால், அநேக சக்கரங்களை வித விதமாக, அமைத்துக் கணக்குகள் தயாரித்து சுமார் 50, 60 பக்கங்களை நிரப்பிவிடுகிறார்கள். கேட்டால் சகலத்தையும் சரியாக கணித்துவிட்டேன் எல்லாவற்றையும் நிர்ணயித்துவிட்டேன் என்கிறார்கள். சரி; இந்த ஆதாரத்தைக்கொண்டு பலனைச்சொல்லுங்கள் பார்ப்போமென்றாலோ, அந்த அர்த்தமற்ற கணக்குடைய ஜாதகத்தை இவர்கள் வைத்துக்கொண்டு "இதில் பாருங்கள் ராசியில் பலமதிகம்; நவாம்சை பிரயோஜனமில்லை; சஷ்டியம்சம் மிகவும் உத்தமம்; அஷ்டவர்கத்தில் பிந்துக்கள் அதிகமாக சுபவர்கம் பலத்திருக்கிறது; தெசை அகாலத்தில் வருகிறது; கால சக்ரதசை அதிக கெடுதலாக இருக்கிறது. கோசாரம் சரியாகவில்லை இது அகால யோக ஜாதகம். ஜாதகத்தில் ஆயுள்பல மதிகமில்லை'' என்று இன்னும் பலவிதமான காரணங்களையே வளர்த்துக்கொண்டுபோய்

இதை ராஜயோக ஜாதகமென்றே சொல்லலாம் ஆனாலும் கொஞ்சம் தோஷம் பலமாக விருக்கின்றது. இப்படி இருந்தாலும் இதனால் அதிக பாதகமிராது. இது பேஷான ஜாதகமாச்சே என்கிறார்கள். இப்படி இவர்கள் பேசுகிறார்களே தவிர ஒரு முக்யமான யோகத்தைத் தீர்மானித்து இம்மாதிரியான யோக ஜாதகமிது என்று ஜாதகபலன் கேட்பவர்களுக்கு புரியும்படி முடிவான பலனைச் சொல்லுவதில்லை. இப்படிச்செய்வது முற்றிலும் பிசகாகும். எப்படியெனில் இவ்வாறு பலவகையான கணிதங்களைச் செய்துக்கொண்டிருப்பதால் சுமார் 50 அல்லது 60 வகையான காரணங்கள் ஒவ்வொன்றின்படியும் ஒவ்வோர் விதமாகப் பலன் சொல்லவேண்டியிருக்கின்றது. இதில் மூலபலமெது உபபலமெது இதில் அங்கமெது அங்கி எது என்பதை அறிந்து சொல்லவேண்டும். இவ்வாறு பலன் சொல்லவேண்டின் இதற்கு அதி தீக்ஷண்யமான மேதையும் ஸதாசாரியனின் உபதேசமும் வேண்டும். நாம் மேலே சொல்லியபடியுள்ளதில் ஒன்று பலம் மற்றொன்று துர்பலம், ஜயம் அபஜயம், லாபம் நஷ்டம், சத்ரு விருத்தி சத்ருஹானி, ரோகப்ராப்தி, அவமிருத்யு பயம், இப்படி இன்னும் அநேகவிதமாய் பலன்கள் சாஸ்திரத்தில் ஒவ்வொன்றுக்கும் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படியுள்ளதில், ஒரே சமயத்தில் ஜாதகருக்குப் பொருந்தும்படி இப்பலன்களை எப்படிச் சொல்லவேண்டும், இதில் எதை விடுவது எதைக்கொள்வது என்பதை ஸ்திரமாக அறியாமல் இந்த கணக்கைக்கொண்டு திணறிக்கொண்டிருப்பதில் என்ன பலன்? இதற்குத்தான் பலிதபாக சாஸ்த்ரப் பயிற்சியும் அதில் நல்ல தேர்ச்சியும் வேண்டுமென்பது. இப்படி எல்லாம் கணக்கைப் போட்டுப் பார்த்துவிட்டு பலிதபாக சாஸ்திரப் பயிற்சியில்லாத



அந்த ஜோதிஷர்கள் கடைசியில் என்ன சொல்லுகிறார்கள் "எல்லாம் நன்றாகயிருக்கின்றது ஒன்றும் பாதகமில்லை சகலமும் சரியாக நடக்கும்; இது ராஜயோக ஜாதகந்தான்" என்று சொல்லுகிறார்கள். இப்படிப் பலன் சொல்வது ஜாதகபலன் கேட்பவர்களுக்கு ரஸிக்குமா? இப்படி சொல்லும் பலனைக்கொண்டு ஜாதகர்கள் எப்படி பலனடைய முடியும்? எனவே இந்தக்கிரமம் முற்றும் தவறாகும்.

அப்படி அவர்கள் சொல்லாமல் நாம் முன்னமே எடுத்துக் காட்டியுள்ளபடி 12 பாவ பலன்களினால் ஜாதகரின் குணாதிசய விசேஷங்களையும் ஜாதகர்களின் வயதுக்கிரமப்படிக்குத் தசாயோக பலன்களையும் கோசாரத்தினால் ஏற்படும் சுபாசுப பலன்களை கால தேசவாதமானப்படிக்கும் பொருத்தமாக இணைத்து ஜாதகர்களின் அந்தஸ்துக்குத் தக்கபடி கால நிலைக்கு ஒத்தவைகளை தர்ம நியாயமான சதுர புத்தியுடன் ஜாதக பலனைத்திறம்பட அழகுபடுத்திச் சொல்லவேண்டும்; இப்படிச் சொன்னால் தான் ஜாதகர்களும் நற்பலனடைய முடியும்; ஜோதிஷனுக்கும் புகழுண்டாகும்; ஜோதிஷத்தின் மேன்மையும் சகலருக்கும் நன்றாகவிளங்கும். இப்படி ஸ்தூலரீதியாகப் பலன் சொல்லமாத்திரம் தான் ஜோதிஷர்களுக்குத் தற்காலத்தில் சக்தி யிருக்கிறதென்பதையும் முன்னமே தெரிவித்துக்கொண்டிருக்கிறேன். இதுபோல் கவனித்து சாஸ்திரத்தை விபரீதார்த்தம் செய்துவிடாமலும், கேட்போருக்குச் சந்தேகங்களை அதிகமாக ஏற்படுத்திவிடாமலும், பலன்களைச்சொல்லி வரவேண்டும். தற்கால யுகரீதிப்படிக்கு சில விஷயங்களைத்தான் ஜோதிஷர்கள் சாஸ்திர ஆதாரத்தைக்கொண்டு சரிவரச் சொல்லமுடியும். இதையறியாமல் சகல விஷயங்களையுமே ஜோதிஷத்தால்

திரிகால பலன்களையும் தேவதாந்தரமான விஷயங்களையும் அறிவித்து வந்தார்கள் என்றும் நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். இவை சாஸ்திர ப்ரமாணமான விஷயம். அது நிஜமாகவும் இருக்கலாம். அப்படித் தற்காலத்தில் நம்மால் சொல்லமுடியுமா? செய்யமுடியுமா? முடியவே முடியாது. இதை நாம் ஒப்புக்கொள்வதில் என்னபாதகம் இதை நாம் ஆக்ஷேபனையின்றி ஒப்புக்கொள்ளவேண்டியதாக இருக்கிறது. இதில் நாம் சங்கோஜப்படவோ வறட்டு ஜம்பம் பாராட்டவோ இடமே கிடையாது.

பூர்வ காலத்திலிருந்த தெய்வக்ஞர்களுக்குத் தக்கபடி அந்த யுகங்களிலிருந்த மஹான்களும் மஹாரிஷிகணங்களும் தெய்வானுக்கிரகத்தை யடையவே ஸதாகாலமும் முயன்று வந்தார்கள். பேரின்பத்தை நாடியடையவே எதையும் செய்துவந்தார்கள். அவர்கள் தற்காலத்தில் நாமிருப்பதுபோல்-இந்த அனித்யமான சரீர சம்பந்தமான விஷயபோக ஆசாபாசங்களையே ப்ரதானமாகக் கொண்டு அல்லும் பகலும் ஸம்ஸார ஸாம்ராஜ்யத்தைக் கோரியவர்களாக இருக்கவில்லை. அவர்கள் ஸர்வேசுவரனின் அருளையேயடைய ஸதாகாலமும் முயற்சியுடையவர்களாக ஜபம், தபம், யோகாப்பியாஸம், யாகம், யக்ஞம், நிஷ்டை முதலியவைகளைச் செய்து வந்தார்கள். அவர்களுக்குத் தான் தங்கள் தபோபலத்தினால் சூக்ஷ்மமான பலன்களையும் சொல்லக்கூடிய சக்தி இருந்தது. அவர்கள் தங்கள் த்யான சக்தியாலும் ஆத்மதிருஷ்டியாலும் தத்துவ ஞான பலத்தாலும் யோகசித்து அகக்கண்ணால் எதையும் கண்டு சொல்ல சக்தி வாய்ந்தவர்களாக இருந்தார்கள். இம்மாதிரியான தபோதனர்களான தெய்வக்ஞர்களால் தான், ஆத்மா, சரீரம், மாயை, கர்மா, இவைகளுக்குள்ள சம்பந்தா சம்பந்தம் இவைகளை எல்லாம்

நான் என் புத்திக்கு எட்டியவரை எழுதியிருக்கிறேன். எழுதி வருகிறேன்.

எனக்குத் தெரிந்த வரையில் தற்காலத்திலுள்ள கன தனவான்களாகிய பிரபுக்களுக்கும் வித்வான்களுக்கும் ஸம்ஸார ஸாம்ராஜ்யமாகிய சுகபோக பாக்ய, களத்ர, புத்ர, பௌத்ராதிகள், உத்தியோகம், ஸிம்ஹாஸன ஆதி பத்தியம், கீர்த்தி, வாஹனுதிகள், பட்டம், பதவிகள் வருவாயின் பெருக்கு, ஆரோக்யம், தம் உத்தேசங்களில் ஜயம், லாபம், இன்னும் இவை போன்றவைகளே ஸதா காலமும் தெரிய வேண்டியிருக்கின்றன. இவற்றையே விரும்பிக் கேட்பவர்கள் தான் அதிகம் இருக்கிறார்கள். தற்கால ஜோதிஷர்களும் இவ்விஷயங்களுக்குத் தான் ஸதாகாலமும் பலன் சொல்ல வேண்டிய அவசியமும் இருக்கிறது. இவ்விஷயங்களைச் சொல்வதற்கு அவ்வளவு சூக்ஷ்மரீதியான பலன்களை ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. அதிக கணக்குகள் போட வேண்டியதும் அனுவசியமாகும்.

பலபாக மூல கிரந்தங்களில் துவாதச பாவ பலன்களை சரிவர மனப்பாடமாகப் படித்து இது வரையில் நாம் சொல்லியுள்ளபடி 12 பாவங்களின் பலனை ஸ்தூலமாக நன்சறிந்து ஜாதகர்களுக்குப் பொருத்தமாகச் சொல்லிவிடில் போதுமானது. இதைத் தவிர, மற்ற தசாயோக ராஜயோகங்களின் பலா பலனை நம் புத்தி ஸாமர்த்தியங்களைக் கொண்டு வெகு அழகாகச் சொல்லி விடலாம். இதுபோல் ஜாதகயோகங்களை நாம் சொன்னல்தான் இதை ஜாதகர்கள் தெரிந்து நடந்து கொள்ளுவார்கள். இப்படி சொல்வது தான் முற்றிலும் சரியான கிரமம். மற்ற தசாபுக்தி கோசாரப் பலன்களை ஜாதக

ந்தில் நேரில் வரமாட்டான் என்பது நிச்சயம்.
பாலவே திபஜ்யோதி ராகம் பாடலாம், பாடு
இருக்கிறார்கள். இதைப் பாடுவதால் விளக்கு
ஏற்றிக் கொண்டு விடும் எனப்படுகிறது. இது
ற்றிக்கொண்டு விடாது. மேகரஞ்சனி பாடி
ழை பெய்து விடாது. துருவன், பிரஹ்லாதன்
அதிபால்ய வயதிலேயே பக்தியின் பெருக்கால்
க் கண்டார்கள் என்றிருக்கிறது. இப்படி தப
கவான் சிறுவர்களுக்கு பிரத்யக்ஷமாவதும் இந்த
இது போலவே தான் முடியாத காரியம். இப்
ல்லாம் செய்ய முடியும், செய்தார்கள் என்று நாம்
இதிகாசங்களில் படிக்கலாம், கதை கேட்டு
யடையலாம்; செய்கையில் கொண்டு வரமுடி
இப்படி எவ்வளவோ விஷயங்கள், வைத்யத்திலும்,
த வித்தையிலும், மந்திர சாஸ்திரத்திலும் ஜோதி
லும், யாகயக்ஞாதிகளிலும் மற்றும் பல சாஸ்திரங்
ம் எப்படியெல்லாமோ செய்து விடலாமென்று
ரங்களில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளது. அவை
அப்படியே நாம் அனுபவத்தில் கொண்டு வந்து
மென்பது இந்த யுகத்தில் ஸாத்யமில்லை. இதற்கு
ங்களை வெகு அழகாகச் சொல்லலாம். சொல்பவர்
க்கின்றார்கள். இது காலக்ஷேபத்திற்கு உதவும்
த்திற்குப் பயன்படாதென்பது நிச்சயம்.
இந்த யுகத்தில் சில பாகந்தான் நாம் மேற்கூறியவை
ல். பலனடைவது ஸாத்யம். இதையறிந்து நடக்க
டும். இதற்காக, சாஸ்திரங்களே உபயோகமில்லை
வு நாம் தள்ளி விடவும் முடியாது. மேகரஞ்சனி
டால் மழை பொய்யாததற்காக ஸங்கீதமே கிடையா
றோ, சிரஞ்சீவியாக இருக்க மருந்தில்லாததால்

வைத்தியமே கிடையாதென்றோ, பகவானிருக்கும் இடத்தையும், புதையலிருக்குமிடத்தையும் ஜோதிஷனால் சொல்ல முடியாததற்காக ஜோதிஷமே கிடையாதென்றோ, நாம் நினைப்பதிற்கில்லை. இப்படிப்பட்டவைகள் அமானுஷ்யமானவைகள். இதை யறிந்து மனுஷ்யரீதியில் நம்மால் சாத்தியமானவைகளையே நாம் கற்று, சகல சாஸ்திரங்களாலும் பலனடைய வேண்டும். இப்படிச் செய்வது தான் ஸாத்யம் சரியான கிரமம், க்ஷேமகரம்.

ஆஸ்திகர்களான உத்தமர்கள் ஜாதக பலனைக் கேட்டு ஜோதிஷர்களின் நல்லுபதேசத்தால் பலனடைய விரும்புபவர்கள் அனுஸரிக்க வேண்டிய சில கிரமங்கள் :

ஜோதிஷத்தின் மஹிமையிலும் இதனால் நாம் நற்பலனடையலாம் என்பதிலும், ஜோதிஷர்களுடைய ஞான விசேஷத்திலும், பரிபூர்ணமான நம்பிக்கையுடையவர்களே ஜோதிஷர்களை பக்தியுடன் நாடி ஜாதக பலனைக் கேட்க வேண்டும். இதில் ஏதேனுமொன்றில் ஸந்தேகப்படுகிறவர்கள் ஜாதக பலன்களைக் கேட்காமல் இருந்துவிடுவதே மிகவும் உத்தமம்.

தெய்வ பக்தியில் நம்பிக்கையற்றவர்கள் தேவாலயத்திற்குப் போகாமலிருப்பதே சிலாக்யம் என்பது போன்றது இவ்விஷயம்.

ஜாதக பலன் சொல்லுவதில் ஜோதிஷர்களில் அனைவருக்குமே சில விஷயங்களேனும் பொதுவில் நன்றாகத் தெரிந்திருக்கும். சிலர் பலவற்றிலும் விசேஷ பாண்டித்யமுடையவர்களாய் நிபுணர்களாக இருப்பார்கள். இப்படியுள்ளவர்கள் அனைவருக்குமே ஒரு ஜாதக பலனைச் சொல்ல வேண்டியபோது மனதில் பயமும் விசேஷ யோசனையும் மேன்மேலும் இந்த ஜாதக பலனில் முதலில் எதைச் சொல்வது, இதை எந்த வகையில் எப்படிச்



சொல்லவேண்டும். என்கிற யோசனைகளும் கற்பனைகளும் ஓடிக்கொண்டே இருக்கும். தாம் சாஸ்திரங்களிற் கற்ற ஸகல ஆதாரங்களையும் ஒரு க்ஷணத்தில் மனதில் ஞாபகப்படுத்திக் கொண்டு எதிரிலுள்ள ஜாதகத்திற்கு பலன்களை கோர்வையாகவும் தொடர்ச்சியாகவும் பொருத்தமாகவும் சொல்லிக் கொண்டே போக வேண்டியிருக்கும்; இதில் எவ்வளவு சிரமம் ஜோதிஷர்களுக்கு இருக்கிறது என்பது ஜாதக பலன் கேட்பவர்களுக்குத் தெரியாது. 'பெற்றவர்களுக்குத் தான் தெரியும் பிள்ளை யருமையும், பிரஸவ வேதனையின் தன்மையும்' என்பது போல் உத்தம ஜோதிஷர்கள் தான் இதை அறிவார்கள்.

இப்படியுள்ளதில் நன்றாகப் படித்த ஜோதிஷர்களிற் சிலர் பயஸ்தர்களாகவும், ஸபை கோழைகளாகவும் இருந்து விடுவதுண்டு. இப்படிப்பட்டவர்களிடம் ஜாதக பலன் கேட்பவர்களில் சிலர் தங்கள் வாக்வல்லமையைக் கொண்டு இவர்களை வெருட்ட ஆரம்பித்து விடுவார்கள். இது எப்படி, அதற்கென்ன பலன், இதை சரியாக கவனித்துச் சொல்லுங்கள், என் தமையனின் மூத்த பிள்ளையின் நக்ஷத்திரம் என்ன? என் ஜாதகத்தைக் கொண்டே அதையும் சற்று கவனித்துச் சொல்லுங்கள் என்பார்கள். ஒரு ஜாதகத்தைப் பார்த்த உடனேயே இவைகளை யெல்லாம் அறிந்து வெகு சுலபமாகச் சொல்லி விடலாமே. எங்க ஊரில் ஒரு ஜோஸியர் இருந்தார். அடாடாடா அவர் இவற்றை யெல்லாம் அப்படியே சொல்லி விடுவார். சமீபத்தில்கூட ரெயிலில் நான் ஒரு ஜோஸ்யரை சந்தித்தேன். அவர் எங்க வீட்டில் எத்தனை வாசற்படி எத்தனை ஜென்னல் அதில் எத்தனை ஒடிந்தவை என்பதை எல்லாம் கூட என் ஜாதகத்தைப் பார்த்த மாத்திரத்தில் உடனே சொல்லி விட்டார் இப்படியே ஒரு நாடியைப் போய்ப்

பார்த்தேன், அந்தநாடி ஜோஸ்யர் எங்க வீட்டில் நான்
அருமையாக வளர்க்கும் நாயின் வம்சத்தின் பெருமையை
யும் அதன் ஜாதியையும் அதன் வயதையும் பெயரையும்
கூட கரெக்டாகச் சொல்லி விட்டார் என்பார்கள். நீங்கள்
என்னவோ ஜாதகத்தை கையில் வைத்துக் கொண்டு
இதை எல்லாம் மளமள வென்று சொல்ல மாட்டாமல்
ஏதோ யோசித்துக்கொண்டே இருக்கிறீர்களே என்பார்
கள். இப்படி ஒரு கோஷ்டி ஜாதகபலன் கேட்பவர்களில்
உண்டு. இது எவ்வளவு வரை நிஜமென்பது பகவானுக்
குத் தான் வெளிச்சம்.

இப்படிப் பட்டவைகளைக் கேட்டவுடனேயே நாம்
மேலே குறிப்பிட்ட பிரிவில் சேர்ந்த ஜோதிஷர்களுக்கு
திகைப்பும் பிரமிப்பும் ஏற்பட்டுவிடும். அவர்கள் ஏற்
கனவே பயஸ்தர்களாதலால், இது போலெல்லாம் நம்மால்
சொல்ல முடியுமா, நாம் கற்றது வீண்தான் போலும்,
நம்வித்தை எதற்குமே பிரயோஜனமில்லை போலும் என்று
நினைத்துக் கொண்டு வாய்மூடி மௌனியாக இருந்து விடு
வார்கள். அல்லது இரண்டொன்றை பயந்து கொண்டே
சொல்லிவைப்பார்கள்.

இப்படி அவர்கள் சொல்லுவதைக்கேட்டவுடனேயே
மேலே குறிப்பிட்ட இனத்தில் சேர்ந்த ஜாதகபலன் கேட்
பவர்களிற் சிலர் இவருக்கு அவ்வளவாக ஒன்றும் தெரி
யாது ரொம்ப ஸாதாரணம் இவர் ப்ரயோஜனமில்லை என்ற
முடிவிற்கு வந்து விடுவார்கள். இது பரஸ்பரம் அறியா
மையும் தைரிய மின்மையுமேயாகும்.

இப்படி யெல்லாம் ஜாதக பலன்களைச் சொல்லி பிர
மிப்பு ஏற்படச் செய்ய ஜோதிஷ சாஸ்திர ஞானமே அவ
சியமில்லை. இதற்கெல்லாம் வெகு சுலபமான குறுக்கு
வழிகள் எவ்வளவோ இருக்கின்றன. ஆனால் இம்முறை



களைக் கையாண்டு பலன் சொல்பவர்கள் சில நாட்கள்
தான் இவர்களைப் போல மேதாவிகள் உலகில் கிடையா
தென்று புகழ் பெறலாம். பிறகு இவர்கள் தம் விலா
சத்தை அடிக்கடி மாற்றிக் கொண்டே இருக்க வேண்டி
யது தான். இது போன்ற முறைகளை உத்தம ஜோதி
ஷர்கள் கையாளலாகாது இது பெரும் பிசகாகும். இது
பேராபத்தாய் முடிந்துவிடும்.

இது இப்படியிருக்க, இம்மாதிரியான வகையில் பலன்
கேட்டுத் திருப்தியடைய விரும்புகிறார்களே இவர்களையும்
ஜோதிஷர்களாகிய நாம் அலக்ஷியம் செய்து விடுவதற்
கில்லை. இவர்களுடைய அறியாமையை இவர்கள் நன்கு
கத் தெரிந்து கொள்ளும்படிச் செய்து விடவேண்டும்.
எப்படியெனில் இப்படிப்பட்டவர்களிடம் ஜாதக பலனைச்
சொல்ல வேண்டியபோது சாஸ்திரத்தைப்பற்றி எதையும்
முதலில் சொன்னால் இவர்களிடம் பலிக்காது, பேர்வாங்க
முடியாது. நாமும் ஏதேனும் இரண்டொரு குறுக்கு
வழிகளை தற்காலிகமாகக் கையாள வேண்டும். அதாவது
இது போன்ற சமயங்களில் நாம் நம்மைச் சற்று தைரியப்
படுத்திக் கொண்டு நாடி ஜோஸ்யர் சொன்னதும் ரெயிலில்
பார்த்த ஜோஸ்யர் பலன் சொன்னதும் உங்கள் ஊர்
ஜோஸியர் சொன்னதும் இதெல்லாம் ரொம்பமட்டம்
ஸர்வ சாதாரண விஷயம், அதென்ன பிரமாதம். இதெல்
லாம் அரிச்சுவடி போன்றது, நான் இதைவிட நன்குகச்
சொல்பவன். அவர்களெல்லாம் கற்றுக் குட்டிகள், இப்
பொழுது உங்களுக்கு என்ன வேண்டுமோ என்னைக்
கேளுங்கள். எப்படிச் சொல்லுகிறேன் பாருங்கள் என்று
ஒரு கேள்வியை பலமாகப் போட்டுவிடில் இதுவே அவர்
களுக்குப் போதுமானது. அநேகமாய் அவர்கள் மேற்
கொண்டு ஒன்றுமே நம்மைக் கேட்கமாட்டார்கள். தாங்

விஷ ஸர்ப்பங்கள் போல பலரிருக்கிறார்கள். இவர்கள் கதி சில காலத்திற்குப் பிறகு அதோ கதியாகி விடுகிறது.

ஒருவரைத் தன் கேள்வியை எழுதி அவருடைய சட்டைப் பைக்குள் வைத்துக்கொள்ளச் சொல்லி அந்த கேள்வி என்னது என்பதையும் சில தந்திர முறைகளால் இரண்டொரு நிமிஷத்தில் சொல்லி விடலாம். இதெல்லாம் வெகு சுலபம். இது ஜோஸியமாகுமா? இப்படிச் செய்வது இரண்டொரு தடவை சற்று பிரமிப்பை உண்டாக்கும். அவ்வளவு தான். பிறகு சாயம் வெளுத்து விடும். இப்படிப்பட்டவைகளைப் பார்த்து இம்மாதிரி பலன் கூறுபவர்களை தெய்வாம்சமென்று சில காலம் நினைப்பவர்கள் கூடப் பலர் உண்டு. இக்கூற்றை நாம் பல ஸமயங்களில் காணலாம். ஆகையால் நிஜமான சாஸ்திர ஆராய்ச்சி மூலம் பலன் சொல்பவர்களும் ஜாதக பலன் கேட்டு நன்மைபெற விரும்புபவர்களும் இம்மாதிரியான மாயாஜால முறைகளைக் கையாளுவதோ இது போன்றவைகளைக் கண்டு பிரமிப்படைவதோ கூடவே கூடாது. இதுபோல் செய்வது பரஸ்பரம் பெரும் பாபமும் ஏமாற்றமுமாகும்.

முதலாவது ஜோதிஷருக்கு சாஸ்திர பாண்டித்யமிருக்கிறதா என்பதை நிர்ணயிக்க வேண்டில் இதற்கு ஜாதகர்கள் ஏதேனும் ஒரு ஸ்தான யோகபாவ விஷயத்தைப்பற்றி சாஸ்திர விஷயமாகச் சர்ச்சை செய்யலாம் இதற்கு ஒரு ஜாதகத்தைக் கொடுத்து ஏதேனும் ஒரு ஸ்தானயோக பலனைப்பற்றிக் கேட்டாலே போதுமானது இதற்கு ஜோதிஷர்கள் பலன் சொல்வதிலிருந்து அவர்களுடைய ஜோதிஷ பாண்டித்யம் எப்படிப்பட்டதென்பது விளங்கிவிடும். இப்படிச் சொல்வதில் கூட ஒரு சில படித்த ஜோதிஷர்கள் ஜாதகத்தைப் பார்த்தவுடனேயே

கூறப்பட்டிருக்கின்றது. இவ்விஷயத்தை ஜோதிஷ சாஸ்திரத்தில் காணலாம்.

எனவே ஆஸ்திகர்கள் அனைவரும் உத்தம ஜோதிஷர்களைத் தமக்கு ஹிதம் (அனுகூலம்) செய்யவல்ல தேவ குருவைப்போல் பாவித்துப் பலன் கேட்கவேண்டும். ஜோதிஷர்களும் சாஸ்திர நியதியைத் தவறாமல் ஜாதகர்களுக்குப் பலன்களை எடுத்துச் சொல்லவேண்டும். இப்படி ஜாதகபலனைக் கேட்பவர்களும் இதுபோல் ஜாதக பலனைச் சொல்பவர்களுமே தீபத்திற்கும் அதன் ஒளிக்கும் உள்ள சம்பந்தத்தைப்போல் பொருத்தமான நற்பலனை பரஸ்பரம் அடைவார்கள். உலகில் கீர்த்திவான்களாகவும் புகழுடனும் விளங்குவார்கள். 'ஸத்யம்வத' 'தர்மம்சர' (ஸத்யத்தைச் சொல், தர்மத்தைச் செய்) என்பது ப்ரமாணம். இதையறிந்து நடந்து ஜோதிஷர்களும் ஜாதகர்களும் பரஸ்பரம் நற்பயன் பெறுவார்களாக.

## ஜோதிஷர்களின் மோசமும், கேட்பவர்களின் பேராசையும்

சிலர் ஜோதிஷ சாஸ்திரத்தைக்கொண்டு எனக்கு புதையல் கிடைக்குமா, எந்த திக்கில் யாரால் என்ன செய்தால் கிடைக்கும், இதற்கு மந்திரம் தந்திரம் அல்லது ஏதேனும் கவசம் இருக்கிறதா, என்ன விலை, அதை நான் வாங்கி அணிந்துகொண்டால் உடனே எனக்கு அது கிடைத்துவிடுமா என்கிறார்கள். மற்றும் சிலர் போட்டி பந்தய விஷயத்தையும் லாட்ரி சீட்டில் வரும் நம்பரையும் குறிப்பிட்டுச் சொல்லுவீர்களா, இதற்குக் கணிதம்செய்ய எவ்வளவு செலவாகும் சொல்லுங்கள் தருகிறேன் என்கிறார்கள். மற்றுமோர் யௌவன கோஷ்டியினர்—இவர்

சாஸ்திரத்தையும் பலவாறு தூஷிக்கவும் வெறுக்கவும் ஆரம்பித்துவிடுகிருர்கள்.

இதுபோல் செய்வது பெரும் பிசகாகும். சிலர் "என்னிடம் 14 லோகங்களையும் ஜெபிக்கக்கூடிய கவசம் இருக்கிறது; இதன் விலை ரூ. 10 தான்; வாங்கி அணிந்து கொள்ளுங்கள்; உங்களுக்குச் சகலவித சம்பத்தும் வந்து விடும்; உங்கள் எண்ணங்கள் யாவும் உடனே பூர்த்தியாகி விடும்; சத்ருக்கள் உங்களுக்கு நடுங்குவார்கள்; பலரும் உங்களைக் கண்டவுடனே வணங்குவார்கள்; பரீக்ஷையில் முதல்தரமாகத் தேருவீர்கள்; நினைத்ததெல்லாம் கை கூடும்; எந்த வேலையிலும் ஜயமே அடைவீர்கள்; எப்படிப் பட்ட வியாதியும் நிவர்த்தியாகிவிடும்," என்றெல்லாம் பல விஷயங்களை குறிப்பிட்டு விளம்பரம் செய்கிருர்கள், சொல் கிருர்கள். இதுபோன்றவைகளை கேட்டவுடனேயே இதைக் கேட்பவர்களுடைய பேராசையானது இவ்விஷயத்தைப் பற்றி தீரயோசிக்க இடம் கொடுப்பதில்லை. உடனே மேற் படி பலனை யடைந்துவிட வேண்டும் என்கிற எண்ணத் துடன் யந்திரத்தையும் கவசத்தையும் வாங்கி அணிந்து கொள்ளுகிருர்கள். இதனுல் இவர்களுடைய எண்ணம் இவர்கள் எதிர்ப்பார்த்தபடி அப்படியொன்றும் பூர்த்தி யாகிவிடுவதில்லை. சில நாட்கள் ஆனவுடனே, எல்லாம் பொய்; மஹா மோசம்; மந்திரமாவது தந்திரமாவது சாஸ் திரமாவது; கவசமாவது யந்திரமாவது; எல்லாம் ஒரே ஏமாற்று வித்தை நமக்கு வரம் கொடுப்பவரா இவர்; ஒன்றுமே பிரயோஜனமில்லை; வீண் தண்டம்; பணமிழந் ததுதான் நாம் கண்ட பலன் என்று சாஸ்திரத்தையும் மந்திர தந்திரங்களையும், யந்திரம் கவசம் இத்யாதிகளையும் ஒருங்கே தூஷிக்க ஆரம்பிக்கிருர்கள். இது அறியாமையே யன்றி வேறல்ல. ஜோதிஷனுக்கோ, அல்லது மந்திர

சற்று யோசிப்பின் இவ்விஷயம் அனைவர்க்கும்
ங்கும். இதை என் நமது உத்தம நண்பர்கள்
ாகாது என்று கேட்கிறேன். ஜோதிஷர்களும்
ிகளும் உபாஸகர்களும் என்மீது இவ்விஷயத்
ில் கோபப்படாது ஒரு முடிவிற்கு வரவேண்டு
கேட்டுக் கொள்கிறேன். இப்படிப்பட்ட வேலை
ரவேசித்துத் தானும் தாஷணைக்கு ஆளாகிக்கேட்
மனவருத்தம் அடைந்து சாஸ்திரத்தையும்
இடம் கொடுக்காமல் நற்பலனை அடையுமாறு
க்கொள்கிறேன். மந்த்ர யந்த்ரங்களில் நாம்
ாவு வரையில் தற்கால நிலையில் பயனடைய முடியும்
ைத விவரமாக என்னால் எழுதப்பட்டுள்ள வாழ்க்
ல் வெற்றி என்னும் புத்தகத்தில் காணலாம்.

ஜோதிஷம், வைத்யம், மாந்த்ரீகம் இம் மூன்று
களைப்பற்றியும் இவைகள் ஒன்றிற்கொன்றுள்ள
டர்பைப் பற்றியும் முன்னமேயே கூறியுள்ளேன்.
தன் தன் கர்மாவைத் தெரிந்துகொண்டு அதற்குத்
கபடி யுக்தி-புத்தி-சக்தி-சாமர்த்தியம் முதலியவைக
ால் முயற்சிசெய்து வெற்றியடையவும் தர்மநியாயமான
ழியில் நடந்து கொள்வதற்கும், தன் அதிருஷ்டத்தை
ிருத்தி செய்து கொள்வதற்கும், ஏற்பட்ட சாஸ்திரமே
ஜோதிஷமாகும். வைத்திய சாஸ்திரம் ஆரோக்யத்தை
விருத்தி செய்துக்கொள்ளுவதற்கும், ப்ரக்ருதி விரோதத்தி
னால் வாத-பித்த-ச்லேஷ்ம மாறுதல்களால் தோஷஜம்
என்றபடி அனாரோக்யம் (ரோகம்) ஏற்படுமானால் அதை
நிவர்த்தி செய்து கொள்வதற்கும் ஏற்பட்டதாகும்.
மாந்த்ரீகம் என்பது பேய், பிசாசு, பாதைகள் மானஸீக
ஹிம்ஸைகள், பயம், நடுக்கம் சித்தப்ரம்சம் மற்றும் பல
வகையான மர்மமான அரிஷ்டங்கள், அதிருஷ்டஹீனம்,